உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு "


| மலர் ரு | ஆங்கீரச ஆண்டு மார்கழித் திங்கள்<br>1932 ஹு டிசம்பர்மீ | இதழ் கஉ |
|---|---|---|




## தீண்டாமை

[பத்திராசிரியர்]

நமது பிறப்பிருப் பிறப்புகட்கு நிலைக்களமாகவுள்ள இந்தியா தேசத்திலே ஏறக்குறைய இருபத்தைந்து கோடிமக்கள் ஹிந்துக்களாக வுள்ளார்கள். இவர்களுள் ஐந்தில் ஒரு பங்கினர் தாழ்த்தப்பட்டவர், ஒடுக்கப்பட்டவர், பறையர், புலையர், ஆதிஹிந்துக்கள் எனப் பலவகையாகப் பெயரிடப்பட்டுள்ள தீண்டாதவர்களா கின்றார்கள். இவர்களைத் தீண்டாது புறக்கணித்து இவர்களோடு சமயம், சமூகம், அரசியல் முதலிய பலதுறைகளில் வேற்றுமையின்றிக் கலந்து ஒத்துழையாததினால் சமயச் சீர்கேடு, சமூகத்தாழ்வு, அரசியலடிமைவாழ்வு முதலிய கொடுமைகள் நமது தேசத்தில் இருப்பதாகவும், இக்குறைகளை நீக்குவதற்கு ஹிந்துக்களனைவரும் அதிதீவிரமாக முயற்சி செய்யவேண்டுமென்றும் அரசியல் வாதிகள் கூறுகின்றனர். சமயத் துறையிலே மட்டும் நின்று தொண்டாற்றுவோர் பலர் இதை ஆக்ஷேபித்தும், சிலர் இதை ஆதரித்தும் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவித்துள்ளார்கள். பரோடா, காஷ்மீரம் என்ற இரண்டு நாட்டுச் சுதேச மன்னர்கள் தீண்டாதாருக்கு ஆலயப்பிரவேச உரிமையைத் தந்துள்ளார்கள். சென்னைச் சட்ட சபையில் தீண்டாதாருக்கு ஆலயப்பிரவேச உரிமை தரவேண்டுமென்ற ஒரு தீர்மானம் எதிர்ப்பின்றி நிறைவேறிற்று.

திருப்பாதிரிப் புலியூரிலும் திருநெல்வேலியிலும் 1929ஹுல் கூடிய அகில தென்னிந்திய சைவர்மகாநாடும் சைவப் பெரியார் தனிக் கூட்டமும் " சைவசமயங்களுள் சைவ ஆசாரமுடைய எம்மரபினர்க்கும் ஆலயவழிபாடு

முதலிய சமய உரிமைகள் சமமாயிருத்தல் வேண்டும்.'' என்ற தீர்மானத்தை நிறைவேற்றின. சிலர்மேற்கூறிய தீர்மானத்தில் 'சைவசமயிகள் என்பது சிவ பெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டுள்ள சமயத்தினர் என்றும்,சைவ ஆசாரமுடைய என்பது புலால்மறுத்தல், கள்ளுண்ணாமை முதலிய அறங் களையுடைமை என்றும், எம்மரபினர்க்கும் என்பது சாதிவேற்றுமை யின்மை என்றும், ஆலயவழிபாடு முதலிய சமயஉரிமைகள் என்பது கோயில் நுழைவு மகேசுவரபூஜை சமபந்திபோஜனம் முதலிய உரிமைகள்' என்றும் இத் தீர்மா னத்திலுள்ள பகுதிகளை விளக்குகின்றனர். வேறுசிலர், புலால் மறுத்தல், கள்ளுண்ணாமை முதலிய அறங்களை யுடைமை அவ்வளவு அவசியமல்ல வென்றும், புலாலுண்டு கள்ளுண்டு விபூதி பூசும் தீண்டும் வகுப்பினரோடு புலால் மறுத்துக் கள்ளுண்ணாச் சைவர்கள் கோயில் நுழைவு சமபந்திபோஜ னம் முதலிய நிகழ்த்துதல் தற்காலப் பெருவழக்கமாக வுள்ளபடியால் தீண் டாதாரோடும் அம்முறையிலேயே கலத்தல் வேண்டு மென்றும், இன்றேல் தீண்டும் வகுப்பினருக்குமட்டும் தாழ்ந்த ஒழுக்கத்தையும், தீண்டாதாருக்கு உயர்ந்த ஒழுக்கத்தையும் அவசியமெனக் கொண்டு பின்னவரை வேறுபடுத் தும் குற்றம், நடுநிலையின்மை முதலியன ஏற்படுமென்றும் கூறுகின்றனர். மற்றும் சிலர் 'சிவபெருமானை வணங்குவோ ரனைவரும் சைவர்கள். அவர்கள் உணவு, ஒழுக்கம் முதலியன பற்றி சமய உரிமைகளில் வேற்றுமை கூடாது' என்கிறார்கள். எனவே, இவைகளை யெல்லாம் நன்காராய்ந்து சைவர்கள் யார், அவர்களது சமய உரிமைகள் எவை, அவ்வுரிமைகட்கும் ஒழுக்கத்துக்கும் என்ன தொடர்புளது, சைவஒழுக்கம்எது என்ற அடிப்படையான பொருள் களைத் தெளிந்து தீண்டாதாருக்கும் ஏனையோருக்கு முள்ள தொடர்பை எவ் வாறு திட்டம் செய்துகொள்ளவேண்டு மென்பதைத் தீர்மானிக்கும் அவசியம் ஏற்பட்டுள்ளது. நாளது டிசம்பர்மீ 30, 31-ம் தேதிகள் 1933ஞு ஜனவரி மீ 1-ம்தேதி ஆகிய மூன்று நாட்களில் சைவசித்தாந்த மகாசமாஜ 27-வது ஆண்டு விழாவும், அதனையடுத்து சைவர்மகாநாடும் திருவிற்கோலம் எனப் பெயரிய கூவம்என்ற பாடல்பெற்ற க்ஷேத்திரத்தில் நடைபெறும். அம்மகா நாட்டுக்குத் தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொரு சைவசபையும் ஒரு பிரதிநிதியை யனுப்புமாறும், நமது சமாஜத்தினர் ஒவ்வொருவரும் மகாநாட்டுக்கு வந்து ஆலோசனையிற் கலந்துகொள்ளுமாறும் மிக்க விநயத்துடன் வேண்டுகிறோம். வர இயலாதவர்கள் தங்கள் அபிப்பிராயங்களைத் தெளிவாகவும் விரிவாகவும் நாளையே நமக்குச் சுணங்காமல் எழுதியனுப்பி உபகரிக்க வேண்டுகிறோம். மகாநாட்டில் ஆலோசனை செய்யுங்காலத்தில் அவர்கள் எழுதி யனுப்பும் அபிப்பிராயங்க ளெல்லாம் வாசிக்கப்பட்டு கருதப்படும் என்பதில் ஐய மில்லை.

இவ்விஷயம் மிகப் பெரியதொரு விஷயமாகையால் இதைப்பற்றி சைவர் கள் அனைவரும் ஒன்றுகூடி இறைவன் திருவருளின் துணைகொண்டு உண் மையைத் தெளிய எல்லாம்வல்ல முக்கட் பரமன் கிருபைபுரியுமாறு வழுத்து கின்றோம்.

# திருப்பதிகம்

[தி. கி. நாராயணசாமி, கிழக்குமருதூர், திருநாமநல்லூர் P. O.]

இதுவரை வெளிப் போந்துள்ள கல்வெட்டு நூல்களால் நமக்குத் திருப்பதிகம் குறித்து கிடைத்த சாசனங்களைத் தொகுத்து ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம். பல வெட்டுகளின் மூலம் வெளியிடாததால் அவற்றிலும் பின்வரும் குறிப்புகள் காணக் கூடுமாயினும், இதுவரைப் போந்த சாசன சாலை அறிக்கையைப் பெரும்பாலும் தழுவியும், தென்னிந்திய சாசன நூலில் வேண்டுவன ஆண்டும், இவற்றை நேரில் கண்டும் கிடைத்ததை ஈண்டு தொகுத்துரைப்பாம்.

பதிகம் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களில் ஒன்று. அது பெரும்பாலும் பத்து அல்லது பதினொரு செய்யுட்கள் கொண்டு தெய்வத்தைப் புகழ்ந்துரைக்கும் பாடற்றொகை; புத்தரின் அருமை பெருமைகளைப் பாராட்டும் நூலுக்குப் பெயர் பதிகமே. "பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத் - தொகுதியாகச் சொல்லுதலுனே என்பவாகலின், மேல் வகுக்கும் ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப் பொருளையுந் தொகுத்துச் சொல்லுதலிற் பதிகம்" என்ற சிவஞான சுவாமிகள் நன்னூல் விருத்தியுரையும் காண்க. இவ்வுரை, பாயிரத்திற்குப் பதிகமென்ற மறு பெயர் தந்தமைக்குள்ள காரணம் காட்டுகிறது. மணிமேகலை, சிலப்பதிகாரக் காவியங்களின் எழுவாயில் பயின்றிருப்பது பதிகமென்பதை ஈண்டு கவனிக்க. நூல் வகைக் குறிக்கும் பதிகப் பதமே பதியமென்று கல்வெட்டில் வந்துளது. பதியமென்பது பதிகத்தினும் வேறாயதொன்றோ வெனின் அற்றன்று.

> அன்னவயல் புதுவை யாண்டாள் அரங்கற்குப்
> பன்னுதிருப் பாவைபல் பதியம்—இன்னிசையால்
> பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
> சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

என்ற திருப்பாவை தனியனை கவனிக்க. சில செதுக்கில் திருப்பதிகத்திற்கு *திருப்பாட்டு என்றுளது. சாசனத்தில் '†இவ்வுடையார் (இறைவன்) திருமுன்பு திருஞானம் ஓத' என்று வருமிடத்துள்ள 'ஞானம்' பதிகத்தைக் குறிக்குமோ வென்ற ஐயம் பின் ஆராய்ச்சியாளர்க் குரியது.

திருவல்லத்து வில்வநாதசாமி கோயில் 'திருமண்டப மிழிச்சி யெடுப்பதற்கு முன்புள்ள சிலாலேகைப்' படியில் விஜயநந்தி விக்ரமன் 17-ம் ஆண்டு சாசனத்தில் '‡திருப்பள்ளித் தாமம் பறிப்பார்க்கும் திரும்பதியம் பாடுவாருள்ளிட்ட பலபணி செய்வார்க்கு நேல்லு நூற்றுக் காடியும்' என்று வருகிறது. இச்சாசனமே பதிகம்பற்றி வந்துள்ள ஏனைச் சாசனங்களிலும் காலத்தால் முந்தியது. பி. தி. ஸ்ரீநிவாச ஐயங்கார்§பல்லவர் சரித்திரத்தில் இந்நந்தி விக்ரமன் காலம் கி. பி. 830 முதல் 854வரை என்றதால் இச்சாசனகாலம்

---

* 57 (1924); 10 (1918). † No 420 & 421. S. I. I. Vol V. ‡ S. I. I. Vol 3. No 43. § பாகம் 3. பக்கம் 60.

கி. பி. 847. இது திருப்பதிகம் குறித்துப் பொதுவாகவும் சுருக்கமாகவும் கூறுகிறது. இதற்கு அடுத்து வருவது *மதுரையும் ஈழமும் கொண்ட பரகேசரவர்மரான முதற் பராந்தகனது 41-ம் ஆண்டில் அல்லூர் பசுபதீஸ்வரர் கோயில் தென்சுவரில் செதுக்கியது. இதன் மூலம் வெளியாகவில்லை. இதில் பதிகம் குறித்து வந்திருப்பதாக சாசன ஆராய்ச்சி வல்லுநரான வெங்கைய்யா கூறியதை அடிக்குறிப்பில் காண்க. இவ்வெட்டின் காலம் கி. பி. 948. முன்னதின்பின் நாலுண்டுகள் கழிந்து இச்சாசனம் பயின்றுளது கவனிக்கத் தகுந்தது. இதன் பின் மதுராந்தக உத்தம சோழன் காலத்தில் திருப்பதிக விண்ணப்பத்திற்கு இரண்டு சிலாலேகை பொறித்துளது. அவற்றில் முன்னது கோனேரி ராஜபுரத்தில் (திருநல்லம்) †கண்டராதித்தர் மனைவி செம்பியன் மாதேவி செய்தது. இதன் காலம் கி. பி. 976. இச்சாசனத்தின் வரி 61-ல் 'திருப்பதியம் பாடுவோர் இருவற்கு நிசதம் தூணி பதக்காக ஓராட்டைக்கு நெல்லு நூற்றெண்பதின் கலத்துக்கு பூங்குடியில் ஒன்றே யெழுமாகாணி யரைக்காணி முந்திரிகை' யென்றும், வரி 88-ல் 'திருப்பதியம் பாடுவோரிருவர்க்கு மனை முந்திரிகைக்கி * * *' என்றும் நடை செல்கிறது. இவ்வெட்டில்தான் காலத்தால் முதலாக இருவர் ஏற்பட்டதும், அவ்விருவற்கு ஆண்டுக்குரிய உணவிற்கும் இருக்க இடத்திற்கும் வசதி ஏற்படுவது காண்கிறோம். ‡இதன் பின்னது கி. பி. 983-வது ஆண்டில் வெட்டியது. இதில் குறிப்பிடத்தக்கது ஒன்றுமில்லை. இவ்வுத்தமச் சோழன் பிதாமகன் முதற் பராந்தகன். இவர்கட்கு இடையில் நாட்டின் நிலை சீர்குலைந்திருந்ததால் சமய சம்பந்தமான கல்வெட்டுகள் அதிகம் பயிலவில்லை போலும்!

உத்தமச் சோழனுக்குப் பின் அரி அணை ஏறியவன் தஞ்சை இராஜராஜன். இச்சிவபாத சேகரன் ஆட்சியில் தான் முதன் முதலாகத் திருப்பதிகத்திற்கு ஒரு சிறப்புக் கல்வெட்டு கிடைத்திருக்கிறது. இச்சாசனம் ஒன்றே பதிக விண்ணப்பத்திற்கென ஏற்பட்ட சிறப்புடையது. இதன் முக்கியப் பகுதி வருமாறு :—

> * * ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தோன்பதாவது வரை உடையார் ஸ்ரீ ராஜ ராஜீஸ்வரம் உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும் இவர்களிலே நிலையாய் உடுக்கை வாசிப்பான் ஒருவனும், இவர்களிலே நிலையாய்க் கோட்டி மத்தளம் வாசிப்பான் ஒருவனும், ஆக ஐம்பதின் மர்க்குப் நிசதம்

---

* 373 (1903): A. S. I. 1905-06 P. 72. The three great Saiva Saints of the Tamil Country and their hymns known as the Devaram, which forms part of the scriptures of the Tamil Saivas, were not forgotten in the time of Parantaka I. is evident from an inscription of his forty first year found in the பசுபதீஸ்வரர் temple at அல்லூர் in the Trichy Dt. Provision is here made for the singing of the திருப்பதியம் hymns (every day). This reference to தேவாரம் is important.

† S. I. I. vol III No 151 A.

‡ S. I, 1. Vol III No 139. &, 13.

நெல்லு முக்குறுணி நிவந்தமாய் ராஜ கேசரியோ டொக்கும் ஆடவல்லானென்னும் மாக்காலால் உடையார் உள்ளூர்ப் பண்டாரத்தே பெறவும் இவர்களில் செத்தார்க்கும் அனுதேசம் போனார்க்குந் தலைமாறு அவ்வவர்க்கு அடுத்த முறை கடவார் அந்நெல்லுப் பெற்றுத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்யவும் அவ்வவர்க்கு அடுத்த முறை கடவார் தாந்தாம் யோக்யர் அல்லாவிடில் யோக்யாராயிருப்பாரை ஆளிட்டுந் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்வித்து அந்நெல்லுப் பெறவும்; அவ்வர்க்கு அடுத்த முறை கடவாரின்றி யொழியில் அந்த நியாயத்தாரே யோக்யராயிருப்பாரைத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய இட்டு, இட்டவனே அவ்வவர்பெறும் படி நெல்லுப் பெறவும் ஆக இப்படி உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர் திருவாய் மொழிந்தருளினபடி கல்லில் வெட்டியது.

கி. பி. 1014-ல் ஏற்பட்ட இச்சாசனத்தில் விண்ணப்பிக்க ஐம்பதின்மருள்ள குழு அமைத்ததும் இவர்களில் ஒலிக்கருவியாகிய உடுக்கை, கொட்டி மத்தளம் வாசிக்க இருவரும், இவர்கட்குப் பின் வருவார் இன்னாரென்பதும், அவர்கட்குரிய யோக்கியதையை வற்புறுத்திக்கூறுவதும், அவர்கட்கு தினவேதனம் முக்குறுணி என்பதும் தெரிகிறது. இதில் எத்தனை சந்தி விண்ணப்பித்தார்கள் என்பதும் பிறவும் தெரியவில்லை. சமீபத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழக சரித்திர ஆசிரியர் ச.க. கோவிந்தசாமிப்பிள்ளை, M. A. அவர்கள் தஞ்சை பெரிய கோயிலில் சுவற்றுச் சித்திரங்கள் கண்டு பிடித்தனவற்றில் ஒன்று இராஜ ராஜன் யானையின்மேல் தேவாரம் ஓதும்போது வைத்திருக்கும் தாளங்களோடிருப்பது. இவ்வோவியத்தால் இவன் எவ்வளவு அளவில் திருப்பதிகங்களை நேசித்தான் என்பது அறியலாம்.

திருப்பதிகம் ஓதுதற்கு *விண்ணப்பித்தல் என்று கல்வெட்டு கூறுகிறது. இவ்விண்ணப்பமும் †இரண்டு அல்லது ‡மூன்று சந்தியும் செய்ததாக அறிகிறோம். மற்றும் பாடலை ¶அனுபவத்தின்படி பாடியதாகத் தெரிகிறது. இறைவன் முன்பு ஓத ஆண் மக்கள் பெற்ற உரிமைபோல் பெண் மக்களும் பெற்றிருந்தது §திருவொற்றியூர் சாசனம் முன்பு நிமந்தமுடைய தேவரடியார் மேல் ஏற்றமாக திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய பெண்டுகள் பன்னிருவர்க்கும்.' என்று கூறுவது காண்க. பதிகம் குருடர்களுக்கு உய்வளித்தமை பின் வரும் வரிகளால் அறிக.

‖ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இரண்டாவது இராஜ ராஜ வளநாட்டுப் பனையூர் நாட்டு வாவலூர் நாட்டுத் தேவதானம்: திருவாமாத்தூர் ஆளுடைய அழகிய தேவர் கோயிலில் திருபதிகம் பாடி வரும் குருடர்களைத் தவித்து நம் தேவாரத்து திருப்பதியம் பாடும் பொய்யாத சேவடி தேவர் கணநாதனை இராஜ ராஜ பிச்சனுக்கும் இவன் வர்க்கத்தார்க்கும் இக்கோயிற் திருப்பதியக் காணியான இவ்வூர் முதல் காணியாக குடுத்தோம். இவன் வர்கத்தாரையும் மெய் இட்டுத் திருப்பதியம் பாடுவித்துக் கொண்டு குருடர்களுக்கு விட்டு வரும் நிவந்தப்படி இவர்களுக்கும் விட்டுக் கல்வெட்டுகவென்று திருவாய் மொழிந்து திருமுகம் பிரசாதஞ் செய்து வந்தமையில் இக்குருடர்கள் முன்பி

---

* 433 (1903) ; S. I. I. Vol II No 65; 128 (1912) †280 (1917) ‡433 (1903); 96 (1925) §128 (1912) ¶433 (1903) ‖பூ மேவுவளர் - மெய்க் கீர்த்தியுடையது ; 433 (1903).

லாண்டுகள் அநுபவத்தின்படி பாடிவருங் குருடர்கள் பேர்பதனறுவரும் இவர்களுக்கு கண் காட்டுவார் இருவரும் ஆகப் பேர்பதினெண்மர்க்கு பேரால் நெல்லு பதக்காக, நாளொன்றுக்கு நெல்லு முக்கலமாக, நாள் முன்னூற்றறுபதுக்கு நெல்லு ஆயிரத்தெண்பதின் கலமும், புடவை முதலுக்கு பேரால் காசு ஒன்றாக காசு பதினெட்டுக்கு காசு ஒன்றுக்கு நெல்லு இருபதின் கலமாக வந்த நெல்லு ஆயிரத்து நானூற்று நாற்பதின் கலத்திற்கு, வேலி ஒன்றுக்கு நெல்லு நூற்றிருபதின்கலமாக இத்தேவர் தேவதானம் கடுவனூரில் விட்ட நிலம் பன்னிரு வேலி. இந்நிலம் பன்னிரு வேலியும் காணியாக இவ்வூர் நிலங் கலந்தபடியே கைக்கொண்டு இத்திருப்பதியம் பாடுவார் பேர்பதினெண்மரும் மூன்று சந்தியும் வந்து திருப்பதியம் விண்ணப்பஞ் செய்து முன்பிலாண்டுகள் இக்குருடர்கள் நிலங் கைக்கொண்டு செய்து வரும்படியே இத்திருப்பதியம் விண்ணப்பஞ் செய்வாரும் செய்துவரக் கடவார்களாக.

இச்சாசனத்தில் நுணிக்கும் ஏற்பாடு இருப்பது கவனிக்க உரியது. இறைவனது பல்வகைத் திருமேனி பற்பல நிலைகளுக்கு உரித்தாயதுபோல தஞ்சை இராஜராஜனுக்கு ஒரு மேனி தேவாரம் கேட்பதற்கென அமைந்தது காண்க.

*பெரிய பெருமாளுக்கு தேவார தேவராக எழுந்தருளுவித்த தேவர் பதாதிகேசாந்தம் ஐவிரலே இரண்டு தொரை உசரத்து நாலு ஸ்ரீ ஹஸ்தமும் உடையராகக் கனமாகப் பித்தளையால் எழுந்தருளுவித்த சந்திரசேகர தேவர் திருமேனி ஒன்று.

பக்க ஒலிக்கருவி (1) உடுக்கை. (2) கொட்டிமத்தளம், (3) தாளம் முதலியன வருகின்றன. "திருமுறை தேவாரச் செல்வன்" என்று இரண்டு †இடங்களில் காணப்படுவதிலிருந்து திருமுறை அக்காலத்திற்குமுன் வகுத்தது தெரியவரும். இவ்விரு பட்டயங்களால் தேவாரம் திருமுறை யென்பதும் அறிகிறோம். கோயில்களில் (4) அர்த்தமண்டபம், (4) மகாமண்டபம், (5) வியாக்யான மண்டபம், (6) புராணமண்டபம் இருப்பது போன்று திருமுறை மண்டபம் இருந்தமை 'எந்தை கோயிலுள் திருமுறை மண்டபமொடுத்து' என்ற உபதேசகாண்ட அடிகளைக் காண்க. இதற்கு சிதம்பரத்தில் ஒரு வெண்பா, சாசனமாக இருக்கிறது.

‡நட்டப்பெருமான் நாம் ஞானக்குழைத்தளித்த
சிட்டப்பெருமான் திருப்பதியம் முட்டாமைக்
கேட்போர்க்கு மண்டபந்தைச் செய்தான் தேவ வேந்தர் கெட
வாட்டிக்கும் தொண்டையர் கோன்மன்.

நிற்க, தென்னிந்தியசாசன இரண்டாம் பதுமம் 20-ம் சாசன 121-வது வரியில் 'கோப்பரகேசரிவன்மரான உடையார் ஸ்ரீராஜேந்திர சோழதேவர்க்கு யாண்டு ௧௩-ஆவது நாள் இருநூற்று நாற்பத்திரண்டினால் உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழதேவர் கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலினுள்ளால்

---

* S. I. I. Vol II † 158 (1911); 10 (1918) ‡ S. I. I. Vol IV, No. 225 L 15.
(1) S. I. I. Vol. II No 65; 129 (1914.) (2) S. I. I. Vol. II. No. 65.
(3) 129 (1914.) (4) 420 (1924.) (5) 110 (1912). (6) நேர் கல்வெட்டு.

முடிகொண்ட சோழன் திருமாளிகையில் வடபக்கத்து தேவாரத்துச் சுற்றுக் கல்லூரியில் நானஞ் செய்தருளா இருந்து' என்று செல்கிறது. இதில் வரும் 'தேவாரத்துச் சுற்றுக் கல்லூரி' யென்பது தேவாரக் கல்லூரியா என்பது பின் ஆராய்ச்சிக்குரியது.

தேவார ஏடுகளைப் பார்த்துப் புதுப்பிக்க வேண்டியவற்றைப் புதுப்பிக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டதாக *சீர்காழிக் கல்வெட்டு கூறுகிறது' செப்பேடு செய்தது சிதம்பர சாசன வெண்பாவொன்றில் வருகிறது.

†முத்திறத் தாரீசன் முதற்றிறத்தை பாடியவர்
ஒக்கமைத்த செப்பேட்டி னுள்ளின்—எழுதி
தலக்கிலெல்லேக் கிரிவாயிசை யெழுதினான்
கூத்தன்தில்லேச் சிற்றம் பலத்தே சென்று.

இவ்வெண்பாவில் முத்திறத்தினர் தேவாரம் பாடியதாகக் கூறுவது கவனிக்க உரியது.

திருக்குகூர் ‡அமரவனீஸ்வரர் கோயில் வடசுவரில் அதிராஜேந்திர தேவன் மூன்றும் ஆண்டில் ஒரு சாசனம் அரசர்க்காக இரண்டு சந்தியும் திருப்பதியம் விண்ணப்பித்தமை தெரிகிறது. இதில் அரசர்க்காக வென்பது அரசர் உடல் நலத்திற்கென சாசனக்காரர் கூறுதலின், பதிக விண்ணப்பம் நலம் பயக்குமென்ற நம்பிக்கை அற்றை நாளில் ஏற்பட்டமை அறிகிறோம். மற்றும் நமக்கு இற்றைநாள்வரை கிடைக்கப்பெறாத திருவிடைவாய் சம்பந்தர் தேவாரம் கல்வெட்டாகக் கிடைத்தது சாசன ஆராய்ச்சியின் அவசியத்தை நிலை நாட்டுகிறது.

ஆறும் மதியும் பொதிவே ணியனூரா
மாறில் பெருஞ்செல் வம்மலி விடைவாயை
நாறும் பொழிற்கா ழியர்ஞா னசம்பந்தன்
கூறுந் தமிழ்வல் லவர்குற் றமற்றோரே.

இப்பதிகங்களில் சிறப்பாகப் பாராட்டக்கூடிய (1) தாண்டகம், (2) திருத்தொண்டத்தொகை முதலியவற்றைக் குறித்தும் சாசனங்கள் கூறுகின்றன. விண்ணப்பித்தார் பெயர்களை இராஜராஜன் கல்வெட்டு கூறுகிறது. அவை வருமாறு :—

பாலன் திருவாஞ்சியத்தடிகளான ராஜராஜ பிச்சன், திருவெண்ணுவல் செம்பொற் சோதி, தக்ஷிணமேரு விடங்கப்பிச்சன், அம்பலத்தாடி, பொற்சுவரன் திருநாவுக்கரையன், மாதேவன் ஞானசம்பந்தன், கயிலாயன், ஆரூரன், செட்டி எடுத்த பாதம், இராமன் சம்பந்தன், அம்பலவன் பக்தர், கம்பன் திருநாவுக்கரையன், நக்கன்சிராளன், அப்பிநாவுக்கரையன், சிவக்கொழுந்து சீராளன், ஐந்நூற்றுவன் வெண்காடன், திருமறைக்காடன், அம்பலக்கூத்தன், ஆரூரன் நாவுக்கரையன், கூத்தன் மிழலேச் சிலம்பன், சம்பந்தன் ஆரூரன், பிச்சன், காசிபன்,

---

* 281 (1918.) †S. I. I. Vol. IV No 225 L. 21. ‡280 (1917.) (1) 219 (1917); (2) 137 (1912); S. I. I. Vol IV. No. 223 திருமாசித் திருநாளில் திருத்தொண்டத்தொகை விண்ணப்பம் செய்வார்க்கு.

சுப்ரமண்யன், கூத்தன் அமரபுஜங்கன், திருவாய்மூரான், திருமலைக்கூத்தன், தில்லைக்காசன், காளிசம்பந்தன், காபாலி கவாலி, நமசிவாயன், சிவன் ஆனந்தன், சிவக்கொழுந்து சம்பந்தன் *நம்பி ஆரூரன், சோமன், ஐயாறன் பெண்ணொர் பாகன், ராஜாதித்தன், செல்வன் கணவதி - என்பன.

இப்பெயர்கள் ஒவ்வொன்றும் பின்வரும் பெயர்களிலொன்றால் முடிபுறுகிறது.

சதாசிவன், ஞானசிவன், மனோத்தமசிவன், பூர்வசிவன், தர்மசிவன், கவச்சசிவன், சத்தியசிவன், வாமசிவன், நேத்திரசிவன், ஓங்காரசிவன், தத்புருஷசிவன், உருத்திரசிவன், அகோரசிவன் யோகசிவன், ஈசானசிவன், இருதயசிவன்.

இப்பெயர்கள் தீக்கை நாமமாயென்பது பின் ஆராய்ச்சிக்கு விடப்பட்ட ஐயப்பாடு.

திருமுறை ஓதிச்செல்வதின் காரணமாகப் பூசல் விளைந்து ஒருவன் உயிர் துறந்ததை வெண்ணெய்நல்லூர் †சாசனம் கூறுகிறது. இனிப் பதிகத்திற்கு முன்னும் பின்னும் திருச்சிற்றம்பலம் இடும் வழக்கம் உண்டோயென்பது நன்றாகத் தெரியவில்லை. ஆனால் பதிகம் குறித்துவாராத கல்வெட்டொன்று திருச்சிற்றம்பலம் என்று முடிவதைக் காட்டிக் கட்டுரையை முடிப்பாம்.

‡ஸ்ரீ பாதம் என் தலை மேலது ஹா திருச்சிற்றம்பலம்.

---

*S. I. I. Vol. 6. No 33. †437 (1921). ‡118 (1698) of S. I. I. Vol. VI.

## முக்கிய அறிக்கை

சந்தா நேயர்கள், 1933-ம் ஷத்துக்குரிய சந்தா ரூபா இரண்டையும் மணியார்டர் செய்ய வேண்டுகிறோம். அப்படி அனுப்பாதவர்கட்கு அடுத்த இதழ் வி. பி. மூலம் அனுப்பப்படும். அதனால் வி. பி. ரிஜிஸ்தர் செலவு மூன்றணு வீண் நஷ்டமாகும்.

காரியதரிசி.

## மதிப்புரை

திருக்குறள் நாட்குறிப்பு - 1933-ம் ஷத்திய டயரி - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு - சென்ற ஆண்டு டயரியைவிட இது மிக அழகாக வுள்ளது. ஒவ்வொரு நாளுக்கும் ஒரு குறள், உரையோடு மிளிர்கின்றது. தமிழில் ஆர்வமுடைய ஒவ்வொரு தமிழரிடமும் ஒரு பிரதி இருக்கவேண்டுவது மிக அவசியம். விலை அணு 5.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# உமாபதிசிவனார் திரட்டியருளிய அருள்முறைத் திரட்டு உரை

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி. ஏ.]

(இதழ் ௧௧, 288-ம் பக்கத் தொடர்ச்சி)

(விளக்கம்) 'கொள்ளைக் குழைக்காதில்' - என்பதைக் 'காதில் ஐக்குழை கொள்' எனக்கொண்டு கூட்டுக. ஐ + குழை = ஐக்குழை எனக் ககர ஒற்றிரட்டித்தது. 'காது' என்பது இரண்டு காதுகளையும். 'குழை' என்பது இரண்டு குண்டலங்களையும் குறிக்கின்றன. குண்டைப்பூதம் - பூதங்கள் குறுகியனவும் தடித்தனவுமாயுள்ள உடல்களை உடையன ஆதலின், குண்டைப்பூதம் என்றார். பூதம் - பூதங்கள். சாதி ஒருமை - திருஞான சம்பந்த அடிகள் "குண்டைக்குறட் பூதம் குழும" என்று திருவதிகை வீரட்டானத் தேவாரம் க-வது பாட்டிற் (46-1) கூறியிருத்தல் காண்க. கொடு கொட்டி - ஒரு வகைப் பறை. கொட்டிக் குனித்துப் பாட, சிவபெருமான் நடனஞ் செய்யும் பொழுது பூதங்கள் தாளம் போட்டுப் பாடி ஆடுதலை அடிகள், "குழலோடு கொக்கரைகை தாளம் மொந்தைக்குறட் பூதமுன்பாடத் தானாடும்மே" என்று திருவதிகை வீரட்டானம் அடையாளத் திருத்தாண்டகம். எ - வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. விகிர்தனார் - இந்தச் சொல்லினது குறிப்புரையை அருள் முறைத்திரட்டு எ - வது பாட்டின் கீழ் நான் எழுதிய உரையிற் பார்க்க. (இதழ் ௬, பக்கம் ௧௨0) உள்ளம் கவர்ந்திட்டுப் போவார் போல - 'உள்ளம் கவர்தல்' என்பது சிற்றின்பத் துறையில் காமரசம் அறியும் பருவம் அடைந்திருக்கிற தலைவிதனது உள்ளத்தை அவளை எதிர்ப்பட்ட தலைவன் வயப்படுத்தித் தன்னை அடையச் செய்தலாகும். பேரின்பத் துறையில் பேரின்பச் சுவையை அறியும் பருவமடைந்திருக்கிற உயிரைச் சிவபெருமான் உலக வாழ்வு வழியினின்று திருப்பி அதன் வயமொழிந்து தம் வயப்படும்படி செய்தலாகும். உயிர் தன்னுடைய ஏகதேச அறிவு வேட்கை செயல்கள் சிவபெருமானுடைய வியாபக அறிவு வேட்கை செயல்களுக்குள் அடங்கி நின்று ஒழுகுதல், உயிர் சிவபெருமானுடைய வயப்படுதலாகும். போவார் போல - ஒருவாறு பக்குவம் அடைந்து வருகிற உயிர்க்குச் சிவபெருமானது அருட்செயல் நன்கு விளங்காததால் "போவார் போல" என்றார். உழிதர்வர் = உழிதர்தல் - திரிதல். உழிதருதல் என்றும் சொல்லுவது உண்டு. சிற்றின்பத் துறையில் உள்ளத்தில் உழிதர்தல் என்பது தலைவியினுடைய உள்ளத்தைவிட்டுத் தலைவன் நீங்காதிருத்தல். "நெஞ்சத்தார் காதலவராக வெய்துண்டல் - அஞ்சுதுமவே பாக்கறிந்து" என்ற 1128-வது திருக்குறட் கருத்தை நோக்குக. பேரின்பத் துறையில் சிவபெருமான் உயிரினுடைய உள்ளத்தில் நடனம் செய்தலாகும். சிவபெருமான் அண்டத்திற்போலப் பிண்டத்திலும் உயிரினது உள்ளத்தில் ஐந்தொழிலாகிய நடனத்தை எப்பொழுதும் செய்து கொண்டிருக்கிறார். இங்கே பக்குவமடைந்து வருகிற உயிருக்குச் சிவபெருமான் அருளல் ஆகிய நடனம் செய்தலால் அந்நடனம் ஞானநடனம் என்று கூறப்பட்டது. நான் தெரியமாட்டேன் மீண்டேன் - மாட்டாமை = இயலாமை. சிற்றின்பத் துறையில் தலைவன் தனது உள்ளத்தைவிட்டு நீங்காமலிருத்தலைத் தலைவி அறிந்துகொண்டாலும் அவன் வயப்படாமலிருத்தலாகும். பேரின்பத்துறையில் உயிர் தனது உள்ளத்தில் சிவபெருமான் நடனம் செய்துகொண்டிருத்தலை அறிந்தாலும் நடனம் செய்யும் கருத்தை அறிந்து அவன் வயப்படாமலிருத்தலாகும். "மறுத்தனன் யானுன்னருளறியாமையில்" என்று மாணிக்கவாசக அடிகள் கூறுதல் காண்க. (நீத்தல் விண்ணப்பம் ௬ - வது பாட்டு) காணக் கண்ணாற் கள்ளவிழி விழிப்பர்-சிற்றின்பத்துறையில் தலைவன் தலைவிக்குத் தனது கண்களாற்பார்க்கும் பொதுநோக்காலன்றித் தனது உட்கருத்தை அறிவிக்கும் சிறப்பு நோக்காற்

பார்த்தல். அந்நோக்கு உட்கருத்தை மறைத்துவைத்திருத்தலால் 'கள்ளவிழி விழிப்பர்' என்றார். தலைவியைத் தன்வயப்படுத்துதல் அந்நோக்கத்தின் உட்கருத்தாகும். "நெற்றி, மேற் கண்காட்டி நிறையுங் கொண்டார்" என்று அடிகள் திருஆமாத்தூர்த்திருத்தாண்டகம் அ-வதுபாட்டிற் கூறியருளினமைகாண்க. பேரின்பத்துறையில் ஒருவாறுபக்குவமடைந்தும் தமது ஞான நடனத்தின் கருத்தாகிய அருளை அறியாதிருக்கிற உயிருக்கு அதனை அவ்வுயிர் அறியும்படி செய்யச் சிவபெருமான் தமது அருட் பார்வையால் மெய்யுணர்வு உண்டாகும்படி நோக்குதல் ஆகும். ஊனக்கண்களுக்கு வேறாகப் பக்குவமடையாத உயிர்கள் காணக்கூடாத கண்ணாயிருத்தலால் நெற்றிக்கண்ணைக் 'காணாக்கண்' என்றார். அந்நோக்குப் பருவமடையாத உயிர்களுக்குத் தெரியாது மறைவாயிருத்தலால், "கள்ள விழி விழிப்பர்" என்றார். காணாக்கண்ணாற் 'கள்ள விழி விழிப்பர்' என்றதனால் சிவபெருமான் உயிரினுடன் கலந்து நின்று உயிருக்குச் செய்யும் காட்டும் உதவியும் சிவபெருமான் பாசஞானத்தால் அறியப்படுவாரல்லர் என்ற உண்மையும் கூறப்பட்டனவாயின. "காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்ற தேவார வாக்கியம் இக்கருத்தினையே கூறுவதாகும். கண்ணுளார்போலக் கரந்துநிற்பர் - பேரின்பத்துறையில் கண் = அறிவு கண் உள்ளார் - உயிரினது தூல அறிவுக்குள் சூக்கும உயிராய் வேறறக்கலந்து இருப்பவராகி. வினைமுற்று வினையெச்சப் பொருளில் வந்தது. போல - அசைநிலை. சிவபெருமான் உயிரினது அறிவுக்குள் அறிவாய் வேறறக் கலந்திருத்தலினால் அவர் உயிர் அறிவால் அறியப்படுவார் அல்லர் என்பது கூறப்பட்டது. சிவபெருமான் உயிர் அறிவால் (பசுஞானத்தால்) அறியப்படுவார் அல்லர் ஆதலின், 'கரந்து நிற்பர்' என்றார். சிற்றின்பத்துறையில் தலைவன் தலைவியினுடைய நினைப்பினுள்ளாராய் அவள் உள்ளத்தைவிட்டு நீங்காதிருந்தாலும் அவளுக்கு மறைவாய்ப் பிரிந்திருக்கிறார் என்பது கூறப்பட்டது. உழிதர்கின்றார் விழிக்கின்றார், கரந்து நிற்கின்றார் என்று நிகழ்காலத்தாற் கூறற்பாலன; தெளிவு அல்லது இயல்புபற்றி உழிதர்வர், விழிப்பர், கரந்துநிற்பர் என எதிர்காலத்திற் கூறப்பட்டன. இப்பாட்டு சிவபெருமான், பக்குவமுள்ள உயிருக்கு அதன் உள்ளத்தில் நின்று அருள் செய்தலைக் கூறுகின்றது.

முற்றொருவர்போல முழுநீறாடி முளைத்திங்கள்
    சூடி முந்நூலும் பூண்டு
ஒற்றொருவர்போல உறங்குவேன்கை ஒளிவளையை
    யொன்றொன்றா எண்ணு கின்றார்
மற்றொருவ ரில்லைத் துணை யெனக்குமால்
    கொண்டாற்போல் மயங்கு வேற்குப்
புற்றரவக் கச்சார்த்துப் பூதஞ்சூழப்
    புறம்பயம்நம் மூரென்று போயினாரே. கூஎ

(உரை) ஒருவர் - ஒப்பற்றவராகிய சிவபெருமான்; முழுநீறு ஆடி(உம்) - தமது திருமேனி முழுவதும் வெண்ணீறணிந்தும்; முளைத்திங்கள் சூடி(உம்) - மூன்றாம் பிறைத் திங்களைச் சடையிலே அணிந்தும்; முந்நூல் பூண்டு(உம்) - (மார்பிலே) முப்புரிகளாலாகிய பூணூல் தரித்தும்; முற்று ஒருவர் ஒற்றுப்போல - முழுவதும் ஒருவரால் அனுப்பப்பட்ட தூதர்போல; உறங்குவேன்கை ஒளிவளையை ஒன்று ஒன்றா எண்ணுகின்றார் - உறங்குகின்றவளாகிய என்னுடைய ஒளிபொருந்திய கைவளையல்களை ஒன்று ஒன்றாகத் தள்ளி எண்ணிக்கை செய்கின்றார்; மால் கொண்டால்போல மயங்குவேன் - பித்துப்பிடித்த ஒருவர் அறிவின்றிச் செய்வதை அறியாது மயங்குதல்போல மயங்குகிறவளாகிய நான்; மற்று ஒருவர் எனக்குத் துணை இல்லை (என்று கூற) - (அப்பொழுது உம்மைத் தவிர) வேறுஒருவரும் எனக்குத் துணையில்லை என்று சொல்ல;

புற்றரவக் கச்சு ஆர்த்து - அவர் புற்றிலே யிருக்கின்ற பாம்புகளைக் கச்சாக (அரையிலே) கட்டி; பூதம் சூழ - பூதகணங்கள் தம்மைச் சூழ்ந்து செல்ல; நம் ஊர் புறம்பயம் என்று போயினர் - "நாம் இருக்கும்ஊர் திருப்புறம்பயம்" என்றுகூறிக்கொண்டு (என்னைவிட்டு நீங்கிப்) போனர்.

(விளக்கம்) அடிகள் இத்தேவாரப் பாட்டில், திரோதமலம் வயப்பட்டு வாழ்ந்து வந்த உலகவாழ்வில் நுகர்ந்த சிற்றின்பத்தினது நிலையாமையையும், சிறுமையையும் அறியலுற்று, உலகவாழ்வினை விட்டுநீங்கி,நிலையான இன்பம்அடைதற்கு வழிஉண்டோ என மயங்கி நிற்கும் சமயத்தில் சிவபெருமான் தோன்றி அருள் செய்தலை, அகப் பொருட்டுறையில் சிற்றின்பச் சுவையை அறியலுறும் பருவம் வந்துள்ள ஒரு தலைவி தனது உறக்கத்தில் நிகழ்கிற கனவிற் றன்றலைவன் தோன்றித் தன் வளையல்களை எண்ணித் தனது ஊருக்கு வரும்படிச் சொன்னர் என்று தன்பாங்கிக்குக் கூறும் கூற்றில் வைத்துக் கூறுகின்றார். "முழு நீறுடி" என்பதனல், சிவபெருமான் உலக முழுவதை யும் அழிப்புக்காலத்தில் தம்மிடத்து ஒடுக்குகிறவர் என்பதும், இயல்பாகவே பாசங்களி னின்று நீங்கியதூயர் என்பதும் 'முளைத்திங்கள்சூடி' என்பதனல் அவர் தம்மைஅடைந் தவருடைய இடர் நீக்குவர்என்பதும் 'முந்நூல்பூண்டு'என்பதனல் தமக்கு ஒன்றும்வேண் டாதவர் என்பதும் குறிப்பிடப்பட்டன. முற்று ஒருவர் போல - 'முற்று' என்ற சொல் இரண்டாவது வரியில் வருகிற 'ஒற்று' என்ற சொல்லுக்கு அடைமொழியாகச் சேர்த் துப் பொருள் உரைக்கப்பட்டது. போல - அசை நிலை. முற்று ஒருவர் ஒற்றும் போல- 'முற்றும்' என்பது மகா ஒற்றுக் கெட்டு 'முற்று'எனக் குறுகி நின்றது. முற்றும்- முழுவதும். ஒற்று - தூதன். நிகழும் செய்திகளை மறைந்து நின்று அறிந்து, தன்னை அனுப்பின முதல்வனுக்குச் சொல்லுகிறவன். (Spy) தலைவிதான் உறங்குங் காலத்து மறைவாய் நின்றுத் தன் வளையல்களைத் தலைவன் எண்ணிப் பார்த்ததனல் அவரைத் தலை வர் என்று கூருது, 'முற்றிலும் ஒரு தூதன் போல வந்தார்' என்று கூறினர். சிற்றின்பத் துறையில் உறங்குதல் என்பது தலைவி தலைவனல் அடையும் இன்பத்தை மறந்து தூங்குதல். உறங்குவேன் கை ஒளிவளையை ஒன்று ஒன்ருய் எண்ணுகின்ருர் - உறங்குதல் - பேரின்பத் துறையில் திரோத மலம் காரணமாக உலகவாழ்வில் மயங்கி இறைவனல் அடையப்பெறும் பேரின்பத்தை அறியாதிருத்தல். உறங்குவேன் - தெரி நிலை ஒருமைத்தன்மை எதிர்கால வினையாலணையும் பெயர். 'உறங்கினேன்' என இறந்த காலத்தாற் கூறற்பாலது. இயல்பு பற்றி எதிர்காலத்தாற் கூறப்பட்டது. 'வளை' என் பது உயிரை வளைந்திருக்கிற உலக வாழ்வுப் பற்றுக்களை உள்ளுறைப் பொருளாகக் குறிக்கும். இப்பற்றுக்கள் திரோத மலத்தால் உண்டாகியவை. அம்மலம் திருவருட்சத்தி யால் இயக்கப்படுதலால் 'ஒளிவளை' என்ருர். சிற்றின்பத் துறையில் 'ஒளிவளை' என்பது பொன்னலாகிய வளையலை வளையைக் குறிக்கும். ஒன்று ஒன்ருய் எண்ணுதல்-என்பது உள்ளுறைப் பொருளாக திரோத மலத்தினலுண்டாகும் பற்றுக்களை ஒன்று ஒன்ருய் சோதனை செய்து அவைகள் ஒவ்வொன்றும் எவ்வளவு உயிரை விட்டு நீங்கி யிருக்கின் றன என்று ஆராய்ந்து பார்த்தல் ஆகும். இது, தீக்கையில் அத்துவ சோதனை என்று கூறப்படும். உயிர் பேரின்பச் சுவை அறியும் தகுதி அடைதற்கு உலக வாழ்வுப் பற்றுக் கள் முழுவதும் நீங்குதல் வேண்டப்படுதலின், அப்பற்றுக்கள் உயிரினை விட்டு நீங்கின வர் என்று சிவபெருமான் பார்த்தார் என்பார், 'ஒன்ருென்ருய் எண்ணுகின்ருர்' என் ருர். "பாதம் பணிவார் தம் பல் பிறவி - ஆய்ந்தாய்ந் தறுப்பாய்" என்று இக்கருத்தைத் திருநாவுக்கரசு அடிகள் திருச்சத்தி முற்றத் திரு விருத்தம் 2 வது பாட்டிற் கூறியிருத் தல் காண்க. ௪-வது அடியில் 'போயினர்' என்று சொன்னதற் கேற்ப,'உறங்கினேன்' என் றிருத்தற்பாலது. 'உறங்குவேன்' என எதிர்காலத்தாற் கூறினர், இது காலவழுவமைதி. மால்கொண்டால் போலமயங்குவேன் - மால் - பித்து. பைத்தியம் கொண்டால்+போல. கொண்டாற்போல மயங்குவேன்+கு - மயங்குவேன். தெரிநிலை ஒருமைத் தன்மை

எதிர்கால வினையாலணையும் பெயர் 'மயங்கினேன்' எனற்பாலது 'மயங்கினேன்' என நின்றது காலவழு வமைதி. மயங்குதல் - இன்னது செய்தல்வேண்டும் என்று அறியாது திகைத்தல். மயங்குதல் - சிற்றின்பத்துறையில் காமாசமறியவந்த தலைவி தலைவனால் அடையப்பெறும் சிற்றின்பத்தை அடைய வழிதெரியாது மயங்குதல்; பேரின்பத்துறையில் பேரின்பச் சுவை அறியும் பக்குவம் வந்த உயிர் உலகவாழ்வு நிலையிலிருந்து தப்பிப் பேரின்பத்தை அடைதற்கு வழி தெரியாது மயங்குதல். நம் ஊர் புறம்பயம் என்று போயினர் - நம் ஊர் புறம்பயம் என்பது சிற்றின்பத்துறையில் தலைவன், சிற்றின்ப மடைய வழி அறியாது மயங்கிக்கொண்டிருக்கிற தலைவிக்குத் தமது ஊர் திருப்புறம்பயம் என்று கூறி அந்த ஊருக்கு வரும்படி தெரிவித்தல். "பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்" என்ற தேவார வசனத்தை ஒத்துநோக்குக; பேரின்பத் துறையில் இறைவன் பேரின்பமடைய வழி அறியாது மயங்கிக் கொண்டிருக்கிற உயிருக்குத் தாம் உயிர்களுக்கு அருள்செய்தற் பொருட்டுத் திருக்கோயில் கொண்டருளியிருக்கின்ற திருப்புறம்பயத்துக்கு வந்து தம்மைத் தமது வியாபக அறிவு வேட்கை செயல்களில் அடங்கி நின்று வழிபடல் வேண்டும் என்று தெரிவித்தல். சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தமக்கு அடிமையாகப் பணிசெய்தல் வேண்டுமென்று அவரிடம் கூறி ஆவண ஓலைகாட்டி மெய்ப்பித்த பொழுது 'நாமிருக்குமிடம் அருட்டுறை' என்று திருவெண்ணெய் நல்லூர்க்கோயிலுக்குட் புகுந்து வழி காட்டினதை நோக்குக. 'புறம்பயம்' என்ற சொற்றொடருக்கு உள்ளுறைப் பொருளாக, முன் "நஞ்சடைந்த கண்டத்தர்" என்ற 35-வது பாட்டின் கீழ் நான் உரைத்த கருத்துக்களைக் கொள்க. "அஞ்சலென்றடித் தொண்டனேற்கருள் நல்கினாய்" எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பாண்டிக் கொடுமுடித் தேவாரம் 5-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. பேரின்பம் நுகருமிடம் அச்சமில்லாத இடம் ஆதலின் 'புறம்பயம்' என்றார். சிவபெருமானுடைய திருவுருவங்களில் வலது கைகளில் ஒருகை அபயக்கையாயிருத்தலை நோக்குக. ஏ - அசை. பின்னே வருகிற 38-வது பாட்டில் 'நின்றார்' என்று கூறியதுபோல அன்றிப் 'போயினார்' என்று இப்பாட்டிற் கூறப்படுதலால், சிவபெருமான் உயிரினுடைய பக்குவத்தை ஆய்ந்து பார்த்துத் தாம் அதற்கு அருட்பார்வை செய்து மலம் நீக்குதற்குத் தகுதி உண்டாகவில்லை என்று அறிந்து, இன்னம் தம்மை அறிதல்வேண்டும் என்று அறிவித்துவிட்டுப் 'போயினார்' என்பது குறிப்பிடப்பட்டது. பாட்டில் சிவபெருமான் வந்தார், சோதனை செய்தார், போயினார் எனக் கூறப்பட்டன வெல்லாம் சிற்றறிவுடைய நம்போல்வார் அறிதற்கு உருவகமாய்க் கூறப்பட்டுள்ளன. அவர் ஒவ்வொரு உயிர்க்கும் அதனதன் பக்குவம் அறிந்து அறிந்து அருள் செய்துகொண்டிருக்கிறார் என்பது கருத்து.

வெள்ளநீர்ச் சடையனார்தாம் வினவுவார் போல வந்தென்
உள்ளமே புகுந்துநின்றார்க் குறங்குநான் புடைகள் போந்து
கள்ளரோ புகுந்தீரென்னக் கலந்துதான் நோக்கி நக்கு
வெள்ளரோ மென்றுநின்றார் விளங்கிளம் பிறையனாரே. ௩௮

(உரை) வெள்ளம்நீர்ச் சடையனார் - கங்கையாற்றுப் பெருக்கை அடக்கி அதனை ஒருதுளியாகச் சடையில் வைத்தவரும்; விளங்கு இளம்பிறையனார் - ஒளிவிளங்கும் மூன்றாம்பிறைச் சந்திரனை அணிந்தவரும் ஆகிய சிவபெருமான்; வினவுவார் போல வந்து - (உறங்குகின்ற என்னிடம்) கேள்விகேட்கிற குறிப்புடனே வந்து; என் உள்ளமே புகுந்து நின்றார் - (நான் அறியும்படி) எனது உள்ளத்தில் வேறாக விளங்கி நின்றார்; உறங்கும் நான் - உறங்கிக்கொண் டிருக்கின்ற நான்; புடைகள் போந்து - (அவர்) பக்கத்திலே போய்; புகுந்தீர் கள்ளரோ என்ன - எனது உள்ளத்தி னுள்ளே நான்அறியாது புகுந்தவராகிய நீர் கள்ளரோ என்று அவரைக் கேட்க; தாம் - சிவபெருமான்;

நோக்கி - (எப்பொழுதும் எனது உள்ளத்தில் உறைகின்றவர் என்று நான் அறிய எனது மலம் நீங்கும் வண்ணம் தமது அருட்பார்வையால்) என்னைப் பார்த்து; கலந்து - (முன்னே அவரை எனக்கு வேறாக நின்றார் என்று கருதிய என்னை இப்பொழுது அவரோடு அத்துவிதமாய்க்) கலக்கும்படி செய்து; நக்கு - (அவ்வாறு நான் அவருடன் அத்துவிதமாய்க் கலந்ததற்காக அகமகிழ்ச்சியினால்) புன்முறுவல் செய்து; வெள்ளரோம் என்று நின்றார் - (நாம்முன் நீ அறியாது கூறியபடி கள்ளர் அல்ல; இப்பொழுது நீ அறிகிறபடி உனது உள்ளத்தில் எப்பொழுதும்) கள்ளமில்லாமல் (மெய்ம்மையாக) இருக்கிறவர் என்று கூறிக்கொண்டு நின்றார்.

(விளக்கம்) 'வெள்ளம்நீர்ச் சடையனார்' என்பதனால் சிவபெருமான் பேராற்றலுடையவர் என்பதும், 'இளம்பிறையனார்' என்பதனால் சிவபெருமான் தம்மை அடைந்தவர்களுடைய இடரைத் தீர்ப்பவர் என்பதும் குறிப்பிடப்பட்டன. 'இளம் பிறையனாரே' என்பதிலுள்ள ஏ - அசை. வினவுவார்போல வந்து - கேள்விகேட்கிற குறிப்பு முகத்திலே விளங்கியது என்பார், 'வினவுவார்போல' என்று கூறினார். கேள்வி கேட்கிறதற்கு வேறாகநிற்றல் வேண்டப்படுதலால் பல 'வேறாகநின்று' என்று பதவுரை செய்யப்பட்டது. "நமது 'அருமைமகனே! நீமலப்பற்று நீங்கி நம்மைச்சேர்ந்து பேரின்பம் அடையும் தகுதி பெறுதற்கு நாம் உனக்கு உலகவாழ்வும் அதற்கு வேண்டப்படும் தனுகரண புவனபோகங்களும் கொடுத்தோமே, அவைகளை நமது கருத்து நிறைவேறும்படி பயன்படுத்திக் கொண்டாயா?' என்பதுகேள்வி. 'என் உள்ளமே புகுந்து நின்றார்' - 'உள்ளமே' என்பதிலுள்ள ஏகாரம் தேற்றம். 'புகுதல்' என்பதுஇங்கே விளங்கிநிற்றல், சிவபெருமான் எப்பொழுதும் எல்லா உயிர்களுடைய உள்ளத்திலும் இருப்பவர் ஆதலின், உள்ளத்தில் ஒளி உருவாய் விளங்கியது உறுதியாய்த் தெரிந்தது என்பார், 'உள்ளமே புகுந்து நின்றார்' என்றார். உள்ளத்திலே விளங்கியது மறையாமல் விளங்கியவாறே 'நிலைபெற்றுநின்றார்' என்பார் 'நின்றார்' எனக் கூறினார். 'நின்றார்க்கு' என்பதிலுள்ள கு - சாரியை. "இரங்கிநீ அருக என்மனத்துள்ளே எழுகின்ற சோதியே" எனவும், "சோதியாய்த் தோன்றும் உருவமே" எனவும் மாணிக்கவாசக அடிகள் கூறியிருத்தல் காண்க. உறங்கும்நான் - பேரின்பத்துறையில் உறங்குதல், என்பது உள்ளுறைப்பொருளாகத் திரோத மலத்தின் வயப்பட்டு சிவபெருமானை அறியாதிருத்தலைக் குறிக்கின்றது. சிற்றின்பத் துறையில் தலைவி தலைவனை அறியாதிருத்தலைக் குறிக்கின்றது. புடைகள் போந்து - புடை - பக்கம். கள் - அசை. சிவபெருமான் உயிரினது உள்ளத்தில் வேறாய் விளங்கிநிற்றலால் "உயிர் புடைபோந்து" என்று கூறப்பட்டது. புகுந்தீர் கள்ளரோ என்ன - புகுந்தீர் - முன்னிலைத் தெரிநிலை இறந்தகால வினையாலணையும் பெயர். சிவபெருமான் இதுகாறும் உயிரினுடைய உள்ளத்திலே விளங்காமல் மறைந்து நின்று, திரோத மலம் நீங்கின பருவம் வந்த இப்பொழுது ஒளிஉருவில் விளங்கி நின்றுள்ளதை அறிந்த உயிர் புதிதாய் விளங்கினவரைக் 'கள்ளர்' என மயங்கி அறிந்தது என்பார் 'கள்ளரோ' என்றார். 'கள்ளரோ' என்பதிலுள்ள ஓகாரம் வினாப்பொருளைத் தந்துநின்றது. நோக்கி - நோக்கம் - அருட்பார்வை - சிவபெருமான் தாம் உயிருக்கு இன்ன தொடர்பு உடையவர் என்று அறியாதிருந்த உயிரை அத்தொடர்பை அறியச் செய்ய அதன் மலம் நீங்கும் வண்ணம் அருட்பார்வையாற் பார்த்தல், இது, நயன தீக்கை என்று கூறப்படும். முதலாவது வரியிலுள்ள 'தாம்' என்ற சொல் மூன்றாம் வரியில் வருகின்ற 'நோக்கி' என்ற வினைக்கு எழுவாயாகவும், மூன்றாவது வரியிலுள்ள 'தான்' அசை நிலையாகவும் கொள்ளப்பட்டன. கலந்து - சிவபெருமான் உயிரினிடத்து அருட்பார்வை செய்து அதனொடு தாம் எப்பொழுதும் அத்துவிதமாய் (இரண்டற)க் கலந்து நிற்றலை அது அறியும்படி செய்தலே இங்கே கூறப்பட்ட கலத்தல் ஆகும். முன் கலவாது, இப்பொழுது கலந்தது உயிரே அன்றிச் சிவபெருமான் அல்லர். திரோதமல நிலையில் சிவ

பெருமான் உயிரினோடு அத்துவிதமாய்க் கலந்து நின்ற முறைமை போல, திரோதமலம் நீங்கின அருள் நிலையில் உயிர் சிவபெருமானோடு அத்துவிதமாய் நிற்கின்றது என்ற உண்மை (கலந்து) என்பதனால் இங்கே கூறப்பட்டது. இவ்வாறு உயிர் சிவபெருமானோடு அத்துவிதமாய்க் கலந்து ஒன்றாகும் நிலைசிவயோகம் ஆகும். சிவயோகத்தின் பின் நிகழும் சிவபோகம் நிகழ்ந்ததாக இத்தேவாரப் பாட்டு கூறவில்லை. நோக்குதலின் பின் கலப்பு நிகழ்தல் முறைமையாதலின், பாட்டில் 'கலந்து நோக்கி' என்றிருப்பதை நோக்கிக் கலந்து என மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது. நக்கு - நகுதல் - புன்முறுவல் செய்தல்; சிறு நகை செய்தல். அகமகிழ்ச்சி காரணமாக முகம் மலர்ந்து சிறு நகை செய்தல். ஒருயிர் திரோத மலத்தினின்று நீங்கித் தமது அருளை அறிந்து, தம்மோடு கலந்ததற்காக சிவபெருமான் அகம் மகிழ்ந்து முகம் மலர்ந்து சிறு நகை செய்தார் என்பது 'நக்கு' என்ற சொல்லாற் கூறப்பட்டது. வெள்ள ரோம் என்று நின்றார் - வெள்ளர் - கள்ளமில்லாதவர் "வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை" என்னும் ஔவையார் முதுமொழியில், 'வெள்ளை' என்பது கள்ளம் இன்மையைக் குறிக்கின்றது என்பது நன்கு விளங்குகின்றது. திருஞான சம்பந்த அடிகளுடைய திருக்கானூர்த் தேவாரம் ௩௦-வது பாட்டில் "தாமோர் கள்வர் வெள்ளர் போல" என்று வரும் சொற்றொடரில் 'வெள்ளர்' என்ற சொல்லுக்கு இப்பொருள் தெளிவாய் விளங்குதல் காண்க. ஓம் - தன்மைப் பன்மை விகுதி; உளப்பாட்டுத் தன்மைப் பன்மை விகுதி அன்று. தன்மைப் பன்மை சிவபெருமான் உலகிற்கு முழுமுதற்றலைவர் என்பதைக் குறிக்கின்றது. 'உளோம் போகீர்' என்று சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருவெண்பாக்கத்தில் கூறி அருளினமை காண்க. நின்றார் - போயினர் என்று முன்னைய 37-வது பாட்டிற் கூறியது போலக் கூறாமல் இப்பாட்டில் 'நின்றார்' எனக் கூறப்படுதலினால் உயிர் சிவபெருமானுடைய அருட்பார்வையால் மல நீக்கம் அடைந்தபின் சிவபெருமானோடு கலந்திருக்கும் சிவயோக நிலையில் நிலைத்திருந்தது என்பது குறிப்பிடப்பட்டது. இப்பாட்டில் (ஒளி உருவில்) 'உள்ளமே புகுந்து நின்றார்' என்பதனால் சிவரூபம் என்னும் தமது சத்துத் தன்மையையும், 'நோக்க' என்பதனால் சிவ தரிசனம் என்னும் தமது சித்துத் தன்மையையும், 'கலந்து' என்பதனால் தமது ஆனந்தத்தன்மை விளங்குகின்ற சிவயோக நிலையையும் சிவபெருமான் உயிருக்கு விளங்கும்படி செய்தார் என்பது உய்த்துணர்க. திருநாவுக்கரசு அடிகள் இந்தத் தேவாரப்பாட்டில் திரோத மலம் நீங்கிப் பேரின்பச் சுவை உணரும் பருவமடைந்த ஒருயிரிடத்தில் சிவபெருமான் வந்து தமது அருட்கண்ணால் நோக்கி மல நீக்கம் செய்து சிவயோக நிலையை அடையச் செய்தான் என்ற உண்மையைச் சிற்றின்பச் சுவையை உணரும் பருவமடைந்த ஒரு தலைவி, தன்னிடம் உறங்கும்பொழுது முன் ஊழினாற் காட்சிப்பட்ட தனது தலைவன் வந்து அவனுடைய உருவ நலமும் பண்பு நலமும் காட்டித் தன்னோடு கலந்தான் என்ற செய்தியைத் தன் பாங்கிக்குச் சொன்னாள் என்னும் அகப்பொருட்டுறையில் வைத்துக் கூறினார்.

சரண மாம்படியார் பிறரி யாவரே
கரணந் தீர்த்துயிர் கையி லிகழ்ந்தபின்
மரண மெய்திய பின்னவை நீக்குவான்
அரண மூவெயி லெய்தவ னல்லனே. ௩௯

(உரை) உயிர் - உயிரானது; 'கரணம் தீர்த்து கையில் இகழ்ந்தபின்' தனது கருவி அறிவைவிட்டு (அக்கருவி அறிவின் வழி செய்யப்படுகின்ற) செயலிலும் மறத்தலைச் செய்த பின்னும்; மரணம் எய்திய பின் - எல்லா அறிவுக் கருவிகளும் செயற் கருவிகளும் தன்னிடம் ஒடுங்கிய பின்னும்; நவை நீக்குவான் - உயிரினுடைய 'நான்' என்

னும் அகப்பற்று 'எனது' என்னும் புறப்பற்று ஆகிய குற்றங்களை உயிரினைவிட்டு நீக்கு கின்றவன்; அரணம் மூ எயில் எய்தவன் அல்லனே - கோட்டைகளாற் சூழப்பட்ட முப்புரங்களையும் வில்லினால் எய்து அழித்தவனாகிய சிவபெருமான் அல்லவா? (சிவ பெருமானே என்றபடி); ஆதலின் சரணம் ஆம்படியார் - உயிர்கள் முடிவில் பேரின்பம் அடைதற்குச் சேரும் புகலிடமாயுள்ளவர்; பிறர் யாவரே - அச்சிவபெருமானை யல்லது வேறு யாருமில்லை; ஆதலால் மாந்தர்களே சிவபெருமானை அடைந்து வழிபடுங்கள் என் பது குறிப்பெச்சம். அவ்வழிபாடு அடுத்த 40-வது தேவாரப்பாட்டிற் கூறப்படுகிறது.

(விளக்கம்) காரணம் தீர்த்து - காரணம் என்பது கருவி. அது இங்கே ஆகுபெய ராய்க் கருவி அறிவைக் குறிக்கின்றது. ஐம்புலன்கள் அந்தக் கரணங்களால் அறியும் அறிவு. தீர்த்தல் - விடுதல். ''தீர்தலும் தீர்த்தலும் விடற் பொருட்டாகும்'' என்பது தொல்காப்பியச் சூத்திரம். கையில் இகழ்ந்தபின் - கை என்பது இங்கே ஆகுபெயராய்க் கைகளினாலும் பிற புற உறுப்புகளாலும் செய்யப்படும் செயலைக் குறிக்கின்றது. கை என்னும் சொல் திருக்குறள் 1036-வது பாட்டு ''உழவினார் கைம்மடங்கின்'' என்பதில் செயல் என்ற பொருளில் வழங்கப்பட்டிருத்தல் காண்க. இகழ்தல் - மறத்தல். திருக் குறள் 538-வது குறளில் வருகிற 'இகழ்ந்தார்' என்ற சொல்லுக்கு 'மறந்தவர்' என்று பரி மேலழகர் உரை கூறியிருத்தல் காண்க. கருவி அறிவை விட்டபின்னும் அவ்வறிவின் வழி நிகழும் செயல் பழைய வாசனையால் நிகழும் ஆதலின், அடிகள் 'காரணந் தீர்த்து' என்று கூறியபின் ''கையிலிகழாதபின்'' என்றும் கூறினார். ''நற்றவா உனைநான் மறக் கினும் சொல்லும்நா நமச்சிவாயவே'' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் நமச்சிவாயப் பதிகத்தில் கூறியருளினர். காரணம் தீர்த்தலும் கையிலிகழ்தலும் பின்வருகிற மரணம் எய்தலைவிட ஒன்றுக்கொன்று மிக நெருங்கிய தொடர்புடையன ஆதலின், அடிகள் அவை இரண்டினையும் ஒன்று சேர்த்து அவைகளுக்குப் பின்னர் 'பின்' என்ற அடை மொழி கூறினர். மரணம் எய்தியபின் 'மரணம்' என்பது உயிர் பருஉடலிலிருந்து நுண் ணுடலில் ஒடுங்குதல். அது, இங்கே 'ஒடுக்கம்' என்ற பொருளில் வந்தது. உயிரினிடத் தில் எல்லாக் கருவிகளும் ஒடுங்குதல் இங்கே மரணம் என்று கூறப்பட்டது. சிவஞான சித்தியார் ஒன்பதாஞ் சூத்திரம் ''காரணங்கள் கெடவிருக்கை'' என்ற இரண்டாவது பாட் டில் 'மரணம்' என்ற சொல்லுக்குப் பத்தாவது அவத்தை என்று சிவஞான சுவாமிகள் பொருள் கூறியருளினார்கள். அதேபொருள்தான் இந்த இடத்திலும். கேவலம் சாக்கிர அவத்தையிலிருந்து எண்ணினால் சகலத்தில் துரியாதீத அவத்தைப் பத்தாவது அவத்தை யாகின்றது. இந்த அவத்தையில் உயிர் கருவிக் கூட்டத்திலிருந்து நீங்கித் தனித்து நிற்கின் றது. இந்த அவத்தையில் கருவிக் கூட்டம் எல்லாம் ஒடுங்கி உயிர்மாத்திரம் தனித்து நிற் கிற நிலை. காரணம் தீர்த்தல், கையில் இகழ்தல், மரணம் எய்தல் என்ற மூன்று நிலைகள் முறையே ஒன்றினொன்று அதிகமாய் இப்பாட்டில் கூறப்பட் டிருக்கின்றன. இந்த மூன்று நிலைகளையும் முறையே சிவசமவாத சைவர், பாடாணவாத சைவர், பேதவாத சைவர் என்ற மூன்று அகச்சமயவாதிகள் கூறுகின்றார்கள். இந்த மூன்று அகச்சமய வாதிகளும் சுத்தாத்துவித சைவரைப்போல பதி பசு பாசம் என்ற முப்பொருள்களை யும் ஒப்புக்கொண்டு உயிர், வீட்டினை அடையுந் தன்மையில் அவரினின்றும் வேறுபடு கிறார்கள். உயிர் சிவத்தினைக் கூடி வீட்டின்பம் அடைதல் வேண்டியதில்லை என்றகொள் கையில் மூன்று வாதிகளும் ஒத்தகொள்கை யுடையவர்களா யிருக்கிறார்கள். இந்த ஒத்த கொள்கையை அவர்கள் மூவரும் கொள்ளுதலிலும் அவர்களுக்குள் சிறிது பேதமிருக் கின்றது. சுத்தாத்துவித சைவசமயத்தின்படி வெவ்வேறு வாதிகளுடைய கொள்கை யானது அவரவருடைய அறிவுநிலையைப் பொறுத்து உள்ளது. சுருங்கக் கூறின், சிவ சமவாதிகள், உயிர் கருவி அறிவினை நீங்கி உலகத்தை அசத்து என்று கண்டவிடத்து உலகத்துக்கு மேற்பட்டு நான் சிவம்எனத் தோன்றும் உயிர் அறிவால் பதியைக் காண் டலே முத்தியாகும் என்பர் பாடாணவாத சைவர். 'நான்சிவம்' என நிகழும் ஞான

மன்றி உயிர்கருவி அறிவைக் கிழாகனாடி சுட்டிக்காணும் காட்சியும் சுகதுக்க அநுபவ உணர்ச்சியு மில்லாமல் கற்போல இருக்கும் நிலையை முத்தி என்பர் பேதவாத சைவர். உயிர் தன்மாட்டு ஒருவனது நிழல், உச்சிப்பகற் பொழுதில் அவன் அடிக்குள் அடங்கி நிற்றல்போலக் கருவிக் கூட்டமெல்லாம் வந்து ஒடுங்கியபொழுது பக்குவம் அடைந்து சிவனுடைய அருளால் அவன் திருவடியைக் கூடாமல், நிரந்தரமாய் நின்று முத்தியை அடையும் என்பர். (விரிவைச் சங்கற்ப நிராகரணம் நூலிற் பார்க்க) இந்த மூன்று வாதிகளும் உயிர் பாசஞானம் (கருவி அறிவு) நீங்கியபின் பதிஞானத்தால் பதியைக் கூடுதல் வேண்டாது பசுஞானத்தால் முத்தி அடைதல் கூடும் என்று கூறுகிறவர்கள். இவர்கள் யான், எனது என்னும் செருக்கு நீங்காதவர்கள். வேதாந்திகள் என்னும் ஏகான்ம வாதிகளும் ''நான் பிரமம்'' என்னும் பச ஞானம் உடையவர்களாயினும் பசு பாசங்களை ஒப்புக்கொள்ளாதவர்கள் ஆதலின், அவர்கள் அகப்புறச் சமயத்தார் ஆகக் கொள்ளப்படுவர். உயிரினிடம் கருவிக் கூட்டமெல்லாம் ஒடுங்கி நின்ற நிலை முடிவான பசு ஞான நிலையாதலின் அதனை அடிகள் கடைசிபாகக் கூறி அருளினர். இந்த நிலைக்குப் பின் நிகழ்வன மேற் கூறிய மூன்று வாதிகளும் அறியாமலிருக்கிற நின்மல சாக்கிரம் முதல் நின்மலத் துரியாதீதம் வரை உள்ள நிலைகள். நவை-பின்+நவை=பின்னை நவை - குற்றம், 'யான்' என்ற அகப்பற்றினாலும் 'எனது' என்ற புறப்பற்றினாலும் உண்டாகும் குற்றம். நீக்குவான் ஆரணம்மூ எயில் எய்தவன் அல்லனே - உயிர் பசுஞானத்துக்கு உரிய யான் எனது என்ற குற்றங்களினின்று நீங்கிப் பதி ஞானத்தாற் பதியோடு அத்துவிதமாய்ச் சேர்ந்து முத்தி அடைதல் கூடுமே அன்றி மேலே கூறிய மூன்று நிலைகளிலு முள்ள பசு ஞானமுடையவர்கள் கூறுகிறபடி முத்தி அடைதல் முடியாது என்பார், அடிகள் ''நவை நீக்குவான் அரண்மூ வெயிலெய்தவனல்லனே'' என்றார். ''யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க் - குயர்ந்த வுலகம் புகும்'' என்று திருவள்ளுவ நாயனார் கூறி யருளினமை காண்க. அல்லனே என்பதிலுள்ள ஏகாரம் வினாப் பொருளில் ''நவை நீக்குவான் அவனே யாவன்'' என்னும் பொருள்பட நின்றது. சரணம் ஆம்படியார் - சரணம் - புகலிடம்; சேரும் முடிவிடம் (Goal) சிவ பெருமான் மல்லை ஞாலத்து வாழு முயிர்க்கெலா மெல்லையான பிரானுயிருக்கின்றான் என்ற உண்மை கூறப்பட்டது. படியார் - தன்மை உடையவர்; அருட் பண்புடையவர்; தமக்கென ஒன்றும் வேண்டாது உயிர்களின் பொருட்டுப் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருள் செய்யும் கருணையாளர். ஆகும் என்ற ஆக்க வினை இடையிலுள்ள 'கு' கெட்டு 'ஆம்' என நின்றது. பிறர் யாவர் - பிறர்+யாவர் - பிறரி யாவர், இகரம் குற்றியலிகரம். யாவரோ என்பதிலுள்ள ஓகாரம் பிறர் யாவரும் இல்லர் என்ற எதிர்மறைப் பொருளில் வந்தது. சிவபெருமான் ஒருவரே சரணமாம்படியார் என்பது பொருள். திருநாவுக்கரசு அடிகள் இந்தத் திருக்குறுந் தொகைத் தேவாரப் பாட்டில் ''இருதிறனறிவுள இரண்டலா ஆன்மா'' அசத்தினைச் சார்ந்து அசத்தின் வண்ணமாய் அசத்தினை அறிந்து அசத்தின் மேலாய் அடைந்த பசுஞான நிலைக்குப் பின் சத்தினைச் சார்ந்து சித்தின் வண்ணமாய்ச் சத்தினுள் அடங்கி சத்தினை அறிந்து அடைகிற பதிஞானத்தால் சிவபெருமானோடு (சத்தினோடு) அத்துவிதமாய்க் கலந்து பேரின்பம் அடைதல் வேண்டுமே அன்றிப் பசுஞான நிலையில் பேரின்பம் அடைதல் முடியாது என்ற உண்மையைக் கூறியருளினர்.

# மார்கழி மாதம் திருவெம்பாவை

[மட்டுவில் - சி. சுப்பிரமணிய ஐயர்]

மிருகசிர்ஷ நக்ஷத்திரமும் பௌர்ணிமையும் கூடும் மாதம் "மார்கசீர்ஷ" என்று சொல்லப்படும். இதுவே மார்கழி மாதமென்று வழங்குகிறது.

ஒரு சூரிய உதயம்முதல் மற்றொரு உதயம் வரை செல்லுகின்ற நேரமானது மனிதர்களுக்கு ஒரு நாள் ஆகும். ஒரு மகர சங்கராந்தி தொடங்கி மற்றொரு மகர சங்கராந்தி வரையிற் செல்லும் நாட்கள் மனிதர்களுக்கு ஒரு வருடமாகும். மனிதர்களின் ஒரு வருடகாலம் தேவர்களுக்கு இராப் பகலோடுகூடிய ஒரு நாளாகும். இதனுள் உத்தராயணமாகிய தை மாசத் தொடக்கம் ஆனி யிறுதியாகவுள்ள ஆறு மாசங்களும் தேவர்களுக்குப் பகற்கால மென்றும், தக்ஷிணாயன காலமாகிய ஆடி தொடக்கம் மார்கழி யிறுதியாக உள்ள ஆறு மாதங்களும் அவர்களுக்கு இராக்கால மென்றும் சொல்லப்படும்.

ஒவ்வொரு மாதமும் ஐயைந்து நாழிகையாகச் செல்லுகின்ற அறுபது நாழிகையுடைய தேவதினத்தில் உதயாத் பூர்வம் ஐந்து நாழிகையாகப் பதினொரு முகூர்த்தங்களுஞ் சென்று பன்னிரண்டாவது முகூர்த்தமாகிய மார்கழி மாதமே தேவர்களுக்கு (ப்ராஹ்மீ முகூர்த்தம்) புலரிக்காலமாகிறது.

தேவர்கள் இம்முகூர்த்தத்திலே பரமேசுவரனைத் தியானித்துத் துதித்து நித்திய கருமங்களை நடாத்துகின்றார்கள். இக்காலத்திலே மனிதர்களும் "வைகறைத் துயிலெழு" என்று நமது மூதாட்டியார் கூறியபடி நித்திரை விட்டெழுந்து, ஸ்நானம், சந்தியா வந்தனம், ஆலய வழிபாடு என்னும் இன்வகளைச் செய்தால் தேவர்கட்குப் பிரீதி உண்டாகுமென்று மகரிஷிகள் கற்பித்திருக்கின்றனர். பன்னிரண்டு மாதங்களிலும் சிறப்புற்றது மார்கழி மாதமாகும்.

மார்கழி மாதத் திருவாதிரை நாளுக்கு முந்திய ஒன்பது நாள் தொடக்கம், திருவாதிரை முடிவுள்ள பத்து நாளும் ஆலயங்களில் புலரிக் காலப் பூசை முடிவில், தேவாலயங்களிலும், மடாலயங்களிலும் திருவாசகத்தி லுள்ள திருவெம்பாவை ஓதப்படுகின்றது. சைவ சமய குரவருள் ஒருவராகிய ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் தியானிக்க முத்தி தருவதாகிய திருவண்ணாமலைக் கெழுந்தருளிய போது அருணாசலேசுவரர், குரு முகூர்த்தமாகத் தரிசனங்கொடுக்கத் தரிசித்துக்கொண்டு அங்கே வாசஞ் செய்கின்ற காலத்தில் ஆங்குள்ள மாதர்கள் தாங்கள் தடாகத்தில் புனலாடும் போது பயனற்ற வீண்பாக்கள் பாடுவதைக் கண்டு, அவர்கள் மீது கருணைகொண்டு, அம்மாதர்கள் ஓதிப் புனலாடும் பொருட்டுத் திருவெம்பாவை யென்னும் இருபது திருவாசகங்களைப்பாடி யருளினர். இத்திருவெம்பாவை திருவருட் சக்தியை விதந்து பாடப்பட்டதாகும். ஆன்மா மலமாகிய இருளில் கிடந்து

துஞ்சாது பரிபாகத்தைப் பெறும் பொருட்டுத் திருவருட் பிரவாகமாகிய தடாகத்துள் மூழ்கும்படி அதனை யெழுப்புவதே திருவெம்பாவையின் தத்துவார்த்தமாகும்.

"மல விருளுற் றுறங்காமல் பன்னுபரி பாக வருட்
செலமுழுக வருகவெனச் செப்பல்திரு வெம்பாவை"

எனவருந் திருப்பெருந் துறைப்புராணச் செய்யுட்பாகத்தாலும் இது நன்கு அறியத்தக்கதாம். மேலும் மலத்தைக் கழுவுவதே ஸ்நானஞ் செய்தலென் றும் திருவருட் பெருக்கே தடாகமென்றும் மாணிக்கவாசகப் பெருமான்,

"தங்கள் மலங் கழுவுவார் வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன் றிசைந்த பொங்குமடு"

என எடுத்துக் காட்டியிருப்பதாலும் இது இனிது விளங்கும்.

நடராஜப் பெருமான் சிற்சபையை விட்டெழுந் தருளுவது படைத்த லாகும் (சிருஷ்டி) இரட்சா பந்தனம் தரிப்பது காத்தலாகும் (ஸ்திதி) கிருஷ்ணகந்தம் தரிப்பது அழித்தலாகும் (சங்காரம்) வெள்ளை சாத்துவது மறைத்தலாகும் (திரோபவம்) திருவிழாக் கொண்டாடுவது அருளலாகும் (அநுக்கிரகம்). நானென்று ஆணவங்கொண்ட அவுணரைச் சங்காரம்செய்து அவர்கள் உடம்பின் கரியசாம்பரைத் திலதமாக்கித் தரித்துக்கொண்ட பாவனையாகக் கிருஷ்ண கந்தஞ் சாத்தப்படுகிறது. சங்கார காலத்தில் அவ னது திருமேனி அதிக உக்கிரமாக இருந்தபடியால் அது தணியும்படி தேவர் கள் பரமசிவனது திருமேனியை வெள்ளை வஸ்திரத்தினாலும் வெண்ணிறப் புஷ்பங்களாலும் மறைத்தார்கள். அப்பாவனையாகவே வெள்ளை சாத்தப் படுகிறது.

சிதம்பரம் என்னுஞ் சொல் ஞானாகாசம் என்று பொருள்படும். சிவ பெருமானுக்கு ஞானமே திருமேனி யாதலாலும் ஞானிகளின் உள்ளத்தின் பேரொளி சிவபெருமானே யாதலாலும் சிதம்பரம் அவ்விறைவனது திரு மேனியெனப்படும். இது பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றாகிய ஆகாசலிங்க ஸ்தலமாம். கனகசபையிலே சிவபெருமான் வலத் திருவடியை முயலகன் மீது ஊன்றி இடத் திருவடியைக் குஞ்சிதபாதமாய் உயர்த்திச் சதாகாலமும் திருநடனஞ் செய்தல் ஆன்மாக்களை அநாதியே பந்தித்த ஆணவாதி மலங் களை நீக்கி முத்தி இன்பங்கொடுக்கும் நோக்கமேயாம். திருவாதிரை நாளன்று எம்பெருமான் பொன்னிறப் பூக்களாகிய சிவந்தி மலர்களால் அழகுசெய்யப் படுதல் அவர் படைக்கும் வன்மையை உடையவர் என்பதைக் குறித்தற்கே யாம்.

"போற்றியாம் உய்ய ஆட்கொண் டருளும் பொன் மலர்கள்
போற்றியாம் மார்கழிநீ ராடேலோர் எம்பாவாய்"

என்று மாணிக்கவாசகப் பெருமான் தமது திருவாசகத்தில் திருவெம்பாவை யிலும்,

"மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளாம்"

என்று ஆண்டாளம்மையார் திருப்பாவையினும் இம்மாதச் சிறப்பினை விதந்து கூறியிருக்கின்றனர். இவ்வாறிருக்கவும், இம்மாதம் விவாகாதி சுபகர்மங் களுக்கு நீக்கப்பட்டதன் காரணம் இது ஸ்நான ஜபதபங்கட்கு விசேட காலமானதாலும் 'ஆலித்தே பெரும்பாரத மார்கழி' என்றபடி பாரதயுத்தம் நிகழ்ந்த மாதமானதாலும் என்பர்.—"இந்து சாதனம்"

# திருஞானசம்பந்தர் புதிய திருப்பதிக ஆராய்ச்சி

[E. N. தணிகாசல முதலியார், பி. ஏ., பி. எல்.,]

சென்ற சித்தாந்தம் மலர் 5. இதழ் 11-ல் திருவாளர் பி. ஜானகிராம் முதலியார் அவர்கள், B. A., அனுப்பிய திருக்கிளியன்னவூர் திருப்பதிகத்தைக் கண்டோம். உத்தியோக முறையில் பிரயாணங்கள் செய்யும் தமிழறிஞர்கள் ஒவ்வொருவரும் நமது முதலியார் அவர்கள் அனுப்பியதுபோல் ஆங்காங்கு வழங்கும் தமிழிலக்கிய சம்பந்தமான விஷயங்களைச் சேகரித்து அனுப்புவாராயின், தமிழ் நாட்டுக்குப் பேருதவி செய்தவராவார். இவ்வாறு வெளியிடல் நித்திரையிலிருக்கும் தமிழ் மாணவர்களைத் தட்டி எழுப்பி ஆராய்ச்சித் துறையில், அவர் மனதைப் பயன் படுத்துமென்பது திண்ணம். ஆகையால் மேற்கண்ட திருப்பதிகத்தைக் கண்ணுற்ற தமிழ் மாணவனான யானும், அத்துறையில் சிறிது செல்ல முயல்வேனாக:—

மேற்கண்ட பதிகம், திருஞானசம்பந்தர் நடையைப் பயில முயன்றிருந்தும், அது வெள்ளிப் பாடலென்றே புலப்படுகின்றது. இப்பதிகத்தின் 8, 9, 10, 11-ம் செய்யுட்கள் சம்பந்தர் பாடலைப்போல், முறையே இராவணன் கயிலையில் நெரிந்தமை, நாரணன், நான்முகன் அடிமுடி காணாமை, சமண சாக்கியப் பழிப்பு, அப்பதிகம் பாடுவதால் வரும் பயன் கூறும் திருக்கடைக் காப்பு என்பனவாம். இந்நான்குமே சம்பந்தர் பதிகங்களுக்கும், இப்பதிகத்திற்கு முள்ள ஒற்றுமையாம். ஏனைய விடயங்களில், இப்பதிகம் புகலிவேந்தர் பதிகங்கள்போல், சொல்வளம், பொருள்வளம் பெற்று விளங்கவில்லை. இதன் செய்யுள் நடை வசன நடையினு முயர்ந்தோங்கவில்லை. சுருங்கச் சொல்லல், விளங்கவைத்த லென்னும் சொற்றொடர்கள் அமைப்பு, சம்பந்தர் பதிகங்களில் காணப்படுவதுபோல் இதில் காணப்படவில்லை. இப் பண்ணமைந்த பதிகங்கள் இரண்டாம் திருமுறையில் சுமார் 14 பதிகங்கள் உள. அவற்றுடன் இதை ஒத்திட்டுக் காண்க.

மற்றும் மேல்நாட்டு இலக்கிய ஆராய்ச்சி முறையில் பரிட்சை யொன்று காண விரும்புகிறேன். இது ஷேக்ஸ்பியர் முதலிய ஆங்கிலப் பெருங் கவி

களின் பாடல்களிலுள்ள வெள்ளிப் பாடல்களைக் கண்டுபிடிக்கும் முறைகளில் ஒன்றாகும். அதாவது சிறந்த கவிகளில் செய்யுளடி முடிவும், அதிலுள்ள வாக்கிய முடிவும் ஒன்றாய்ப் பெரும்பாலும் இரா. இவை ஆங்கிலத்தில் ஓடு நடை வரிகள் (Run-on lines)' எனக்கூறப்படும். இவை செய்யுளில் மிகுத்துக் காட்டாவிடின், அச்செய்யுள் பாடியவன் நூதனமாய்க் கவிபாட யத்தனிப் பவனென்று சந்தேகிக்க இடந் தரும். நமது சமய குரவர் பாடல்களில் இவ்வரிகள் (அடிகள், அதாவது ஈற்றடி யொழிந்த ஏனைய,.) நூற்றுக்கு அறுபதுக்குக் குறைவதில்லை. திருஞான சம்பந்தர் பாடிய முதல் பதிகமான 'தோடுடைய செவியன்'' என்னும் திருப்பதிகத்தில் ஓடுநடை வரிகள், (Run-on lines) நூற்றுக்கு அறுபதுக்குக் குறையவில்லை. இப்பதிகமோ மதுரையில் சமணரை வென்ற பிறகு பாடப்பட்டதாய்ச் சொற்றொடர் பெற் றிருப்பதால், இப்பதிகம் "தோடுடைய செவியனை''க் காட்டிலும், அதிக மான ஓடுநடை வரிகள் பெறவேண்டு மன்றோ? அவ்வாறிராது, இப்பதிகத் தின் ஒவ்வொரு அடியின் முடிவு, முற்றுப்புள்ளி பெற்றதுபோலோ, அல் லது அதற்குச் சற்று சமானமாகவோ, நின்று நின்று தடைப்படுவதைக் காண்க. இவ்வாறு ஈற்றின்கண் செல்லாது தெற்றிக்கும் அடிகளில் விஷயப் போக்கு, ஆளுடைய பிள்ளையார் "உளங் குளிர்ந்தபோதெலாம் உகந்துகந் துரைப்பனே'' என்றதுபோல் வெள்ளமாய்ப் பாயும் மொழிகளாய்க் காணப் படவில்லை.

ஆயினும் சைவத்திருவாளர் சிவத்தலத்தில் போற்றும் இப்பதிகத்தை வெள்ளிப் பாடலென்று கூறவேண்டி யிருப்பதற்கு வருந்துகின்றேன். திரு முறை இலக்கிய ஆராய்ச்சியில் சற்று ஈடுபட்டு 'திருஞானசம்பந்தர் பதிகக் கட்டட அமைப்பு' என்னும் கட்டுரை வெளியிட எண்ணி இருப்பதாலும், அதில் இப்பதிகத்தையும் வெள்ளிப் பாடல் வகைகளில் ஒன்றாய்க் காட்ட வேண்டியதவசிய மாகையாலும், இதனை இங்ஙனம் துணிந்து வெளியிடலா னேன். இக்கட்டுரையில் உள்ள குற்றங்களை அறிஞர்கள் களைவார்களாக.

## அறிக்கை

சைவத் திருவாளர் - மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் 1932ஆ ஜனவரிமீ 2உ முதல் பன்னிரண்டு நாட்களில் தினம் ஒரு சூத்திரமாகச் சிவஞான போதத்தைப்பாடமாகச் சமாஜக் காரியாலயத்தில் நடத்துவார்க ளென்று எதிர் பார்க்கப்படுகின்றது. விவரங்கள் சமாஜ ஆண்டு விழாவிலும் தினசரிப் பத்திரிகைகளிலும் தெரிவிக்கப்படும்—காரியதரிசி.